# எங்கள் கணேசன்

(நினைவு அறிக்கை)






## நா. அருணாசலன்

கண்டவராயன்பட்டி

தேர்தல் பொதுகூட்டத்தில்

# திரு. சா. கணேசன் அவர்கள்

கூறிய வீரச்சொற்கள்

---

ஆடம்பரக்காரர்களுக்கு இடம் கொடுக்காதீர்கள்.

அரசனும், ஆண்டியும் மக்களுக்கு ஒன்றே.

ஆண்டி அரசனோடு போட்டியிடுவது பட்டம் பதவிக்கல்ல.

மக்களின் நலனைக்குறித்தே ஜனநாயக அடிப்படையில் போட்டியிடப்படுகிறது.

இதனைச் சிந்தித்து வாக்களிப்பது வாக்காளர் கடமை.

நான் பணக்காரனுக்குப் பணியமாட்டேன்.

பாமரனும், பணக்காரனும் எனக்கு ஒன்றே.

பாமரனுக்கு இரக்கம் காட்டி என்றும் பணிசெய்வேன்.

அக்கிரமத்திற்குத் தலை குனியாதீர்கள்.

அதனை எதிர்த்து நிற்பதே நமது தேர்தல் போராட்டம்.



# எங்கள் கணேசன்

## நினைவு அறிக்கை

*

எழுதியவர்

**நா. அருணாசலன்**

தலைவர்

காங்கிரஸ் கமிட்டி

கண்டவராயன்பட்டி

இராமனாதபுரம் மாவட்டம்.




*

வெளியிட்ட தேதி

**6 — 9 — 1982**

உ

சிவமயம்

# அருள்மிகு கற்பகவிநாயகர் வணக்கம்



கற்பகநன் மூர்த்திஎனக் காசினியோர் போற்றுகிற
அற்புதமே நற்பிள்ளை யார்பட்டி — பொற்பதமே
முப்பழமும் மோதகமும் முன்படைத்தோம் எங்களையே
நற்பணியில் நாளும் நடத்து.

(கவிஞர். சே. கனகசபை B. A.)

304

ஓம்

ஒன்றேகுலம், ஒருவனேதேவன்

# கணேசன் நாமம் வாழ்க!



(கம்பன் அடிப்பொடி சா. கணேசன்)

கன்னித் தமிழ்வளர்த்தான்! கம்பன் புகழ்வளர்த்தான்!
மண்ணில் ஒளிர்ந்தான் மலைவிளக்காய் – பின்னும்காண்!
கம்பன் அடிப்பொடியாய்க் கம்பன் அடிச்சேர்ந்தான்!
கம்பன் கணேசனவன் காண்!

---

சட்டையிலாக் காந்தியிவன்! தக்கதமிழ்ப் பேரறிஞன்!
பட்டம் பதவி பவிசறியான் – சற்றும்
கருவமிலாத் தொண்டுசெய்தான்! கம்பன் பணியில்
பெருமை கொண்டான் தன்புகழைப் பேசு!

(கவிஞர் சே. கனகசபை பீ. ஏ.).

ஓம்

# எங்கள் கணேசன்



எங்கள் அருமைச் சகோதரரும், என் பெருமதிப்பிற்குரிய அரசியல் குருமார்களில் ஒருவருமாகத் திகழ்ந்த திரு. சா. கணேசன் அவர்களை நினைத்தாலே உள்ளம்சிலிர்க்கும். உணர்ச்சி பெருகும். அவரது பிரிவை நினைக்கையில் மனம் வேதனை யடைகிறது. எனினும் அவர்பால் கொண்டுள்ள அன்பின் பெருக்கால் எங்கள் அருள்மிகு கற்பக விநாயகப்பெருமான் திருவடியை வணங்கி **"எங்கள் கணேசன்"** என்ற தலைப்பில் இந்நினைவு அறிக்கையை வெளியிடுகிறேன்.

மனிதன் பிறக்கிறான்; இறக்கிறான். இதற்கிடையில் அவன் ஆற்றிய பணிகள் என்ன? அப்பணிகள் சமுதாய நலத்திற்கும், நாட்டின் நலத்திற்கும் மக்களின் பண்பாட்டு வளர்ச்சிக்கும் எந்த அளவு உதவி செய்தன என்பதுதான் கேள்வி? ஒவ்வொரு மனிதனும் இந்தக் கேள்வியைக் கேட்கலாம். ஆனால்? இக்கேள்வி ஓர் ஆத்ம சோதனையாகவே அமையும்.

ஒரு மனிதன் இலக்கியச் சேவை செய்கிறான். ஒரு மனிதன் சமுதாயச் சேவை செய்கிறான். மற்றொரு மனிதன் அரசியலில் சேவை செய்கிறான். இன்னொரு மனிதன் ஆன்மீக வழியில் பணியாற்றுகிறான். பிறிதொரு மனிதன் தன் வாழ்நாளில் எந்தவிதப் பணியுமே செய்யாமல் உண்டு; உறங்கி; உழன்று முடிந்துவிடுகிறான். சிலர் தங்கள் ஆடம்பரத்தையே விரும்பி புகழைப்பெற தொண்டாற்றுவதுபோல் காட்சியளித்து மக்களை ஏமாற்றி வருபவர்களும் உண்டு.

இப்பணிகளிலே எந்தப்பணி உயர்ந்தது என்பதை கவனித்தல் வேண்டும்; ஒவ்வொரு பணியும் ஒவ்வொரு விதத்தில் சிறந்ததாக இருக்கலாம். எல்லாப் பணிகளும் மக்களுக்கு நல்லமுறையில் பயன்பெற வேண்டும் என்பதே நம் இலட்சியம்.

ஆனல்? எவ்விதப் பணியோ கடமையோ ஆற்ருமல் சமுதாயத்தில் இருந்து நன்மையை எதிர்பார்க்கும் சுயநலக் காரர்களால்தான் கேடு விளைகின்றன என்பதையும், பொது நலத் தொண்டர்களால்தான் சமுதாயம் என்றென்றைக்கும் ஏதாவது ஒரு வழியில் மேன்மை அடையும் என்பதையும் எடுத்துக் கூறினுல் அதை எவரும் மறுக்கமாட்டார்கள்.

அத்தகைய முறையில் சமுதாயத்தை மேன்மைபெற பல்வேறு வழிகளிலும் சிறந்த தலையாய சேவை செய்து அரும்பாடுபட்ட பணியாளர்களில் தலைசிறந்தவர் **எங்கள் அண்ணன் திரு சா. கணேசன்** இவர்களின் தொண்டை என்றென்றும் பாரதமும், தமிழகமும் பொன் எழுத்தால் பொறித்து போற்றிப் புகழும்.

திரு. சா. கணேசன் அவர்கள் முதலில் அரசியலில் ஈடுபட்டு தேச விடுதலை இயக்கத்தில் தீவிரமாகச் செயல்பட்டு சேவைகள் பல புரிந்தார். விடுதலை வேட்கையில் நாட்டம் கொண்டதால் வீடு, வாசல், சொத்து, சுகம் அனைத்தும் இழந்து குடும்பத்தையே மறந்து தன்னலமற்ற தியாகியாகி யானுர், நாட்டின் விடுதலைக்காக போலீஸாரால் அடிபட்டார். சிறைப்பட்டார். சிறையிலிருந்து விடுதலையாகி வந்தது முதல் நாடு சுதந்திரம் பெறும்வரை நாட்டின் விடுதலைக்காகத் தீவிரமாகப் பணியாற்றி நாட்டின் சுதந்திரத்தைப்பெற்ற தலைவர்களில் ஒருவராகப் புகழ்பெற்ருர்.

‘வந்தேமாதரம்’ என்று சா. கணேசன் அவர்கள் சொல்லும்பொழுது ஒரு தனிக்குரல், தனிப்பாணி; இதைக் கேட்டதுமே தொண்டர்களுக்குத் தனி உற்சாகம், உணர்வு உண்டாகும். அதைக்கேட்டுத் தியாக உணர்வில் மக்கள் எழுச்சிபெற்ற நாட்டின் விடுதலைக்கு தொண்டாற்றினுர்கள் என்பது பெருமைக்குறிய சேவையாகும்.

அடுத்து இலக்கிய மொழித்தொண்டில்

கம்பன் வாழ்க!
கம்பன் புகழ் வாழ்க!
கன்னித் தமிழ் வாழ்க!

என்ற சொல்லே அவர் முழங்கினால் இலக்கிய உலகில் ஒரு தனிப் பாணியாக அமைந்திருக்கும். அதேபோல அரசியலிலும் அவரது பேச்சும், நடையும், உடையும், பாவனையும் தனித் தன்மை வாய்ந்தவை. அடுத்து சமூகக் கூட்டங்களில் வந்து பேசினால் பணிவு, கட்டுப்பாடு, கண்ணியமான வார்த்தைகளே நிறைந்திருக்கும். சிறிதளவுகூட தவறான வார்த்தைகளைக் காணமுடியாது.

காங்கிரஸ் மகாசபை அந்தக்காலத்தில் வெள்ளையனை வெளியேற்றத் தீர்மானித்து, தேச விடுதலைப் போராட்டம் நாடு முழுவதும் தீவிரமடைந்து வெள்ளையனே வெளியேறு என எங்கு பார்த்தாலும் மக்கள் குரல் ஒலித்து, மஹாத்மா காந்தியின் தலைமையில் தொண்டர்கள் கோடி கோடியாய் கூடி வெள்ளையர் ஆட்சியோடு போராடிய அக் காலத்தில் சா. கணேசன் அவர்களைக் கண்டவர்கள், அவர் பேச்சைக் கேட்டவர்கள் அவரின் அன்றைய அரசியல் பணியினை கண்டு பாரதநாடு விடுதலையடைய பலர் காங்கிரஸில் சேர்ந்தனர். காங்கிரஸ் எதிர்கட்சியாளர்கள் பார்த்து திகில் அடைந்தனர்.

கன்னங்கரிய உருவம்; கண்களிலே ஒளி மிகுந்த விழிப் புணர்ச்சி, தானே நூற்று அந்நூலைக் கொடுத்து வாங்கி உடுத்திக்கொண்ட தூய நான்கு முழக் கதர் உடை; இடது தோளில் மடிப்புக் கலையாத துண்டு; கையிலே வெற்றிலைப் பெட்டி கால்களிலே மிதியடிகளுடன் நிமிர்ந்த நன் நடை; கண்களுக்குக் கண்ணாடி இந்தத் திருக்கோலத்துடன் சா. கணேசன் அவர்கள் காந்தி சதுக்கத்துக் கூட்டங்களுக்கும், பொதுக்கூட்டங்களுக்கும் வந்த காட்சியை மனக் கண்முன் கற்பனை செய்து பாருங்கள். அவர்கள் இன்னும் நம் கண்முன் நிற்பதுபோல் தோன்றுவார்.

திரு. சா. கணேசன் கூட்டங்களுக்கு மட்டும் வந்து பேசுவதோடு மட்டுமின்றி உறுதியான செயல்களை செய்வதிலும் ஈடுபட்டார்.

தன்னுடைய உள்ளத்தைச் செம்மை செய்து கொண்டார். இந்தக் காரியத்திலே தான் ஈடுபடுவது; இன்னின்ன காரியங் களிலே ஈடுபடுவதில்லை என்று முடிவு செய்துகொள்வார். தன்

கடமை வழுவாது செய்து இலட்சியத்தை நிறைவேற்றுவார். சமுதாயத்தில் நடைபெறும் சில தீங்குகளை பார்த்து நேர்மையாளன் கோபப்படுவது இயற்கைதானே! இது சிலருக்குப் பிடிக்காது வெறுப்பாகக் கருதுவர். பின்னர் வெறுப்படைந்வர்கள் இவர் வழிக்கே வந்துவிடுவர்.

**இந்தியாவின் கவர்னர் ஜெனரல்** ஆகப்பணியாற்றிய அரசியல் மேதை **சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்** அவர்களைப் பின்பற்றி நடந்தவர். இராஜாஜி சொல்லை ஒரு துளியும் தட்டமாட்டார். இவரது ஆணைப்படி தமிழகத்தில் யாரும் எதிர்க்கமுடியாத வல்லமைபெற்ற சிறந்த இரு தலைவர்களை எதிர்த்துப் போட்டியிட்ட பெருமை திரு. சா. கணேசன் அவர்களுக்கு உண்டு. இவர் போட்டியிட்டதைக் கண்டு அகில இந்தியத் தலைவர்களும் பாராட்டினர்.

வீடு இழந்து, வாசல் இழந்து, சொத்து சுகத்தை இழந்து விடுதலைக்குப் புரியும் சேவை ஒன்றே நிலையானது என்று நம்பி வாழ்ந்த ஒரு விடுதலை வீரனின் சரித்திரம்தான் சா. கணேசன் அவர்களின் முற்பகுதி வாழ்க்கை!

பிற்பகுதிக் கதை முழுக்க முழுக்க இலக்கிய சேவையாகவே மலர்ந்து மணம் பரப்பிற்று.

கம்பனே தெய்வம்
கம்பனே வாழ்வு
கம்பனே எல்லாம் என்று மாறிய

சா. கணேசன் அவர்கள் கப்பன் அடிப்பொடியாக மாறியதில் வியப்பு ஒன்றுமில்லை. கம்பனுக்கு ஒரு நம்மாழ்வாராகத் திகழ்ந்தார்.

கம்பனுக்குத் தெரியாத கலைஇல்லை
கம்பன் பாடாத நயம் இல்லை
கம்பனுக்கு மேலாக உலகில்

காவியகர்த்தா இல்லை. இதுவே உண்மை. என அல்லும் பகலும் கம்பன் புகழ்பரப்பி கன்னித் தமிழ் வளர்த்து வாழ்ந்தார்.

கம்பனுக்கு ஒரு சோழன் ஆதரவு காட்டினுன்.

கம்பனை ஒரு சடையப்ப வள்ளல் வளர்த்தான்.

கம்பனுக்கு ஸ்ரீ ராமபிரான் ஆதர்சமாக இருந்து கவிபாடத் தூண்டினுன்.

கம்பனுக்கு ஒரு வால்மீகி இருந்தான்.

கம்பனுக்கு ஒரு கணேசன் இருபதாம் நூற்ருண்டிலே அடிப்பொடியானுன்.

கம்பன் மிகப் பெரியவன். கம்பன் காவிய உலகில் பெரியவன். கவிதை உலகில் பெரியவன்.

பெரியவனைத் தொட்ட புண்ணியம் பலன் நிச்சயமாக உண்டல்லவா ?

'அறத்தின் மூர்த்தி' என்று ஸ்ரீ ராமபிரானைக் கம்பன் அடிப்பொடி அவர்கள் கவிஞனின் சொற்களாலேயே அழுத்தம் திருத்தமாகக் கூறும்பொழுது, அவர்களுக்கு அறத்திலுள்ள ஆழ்ந்த பற்றும் நம்பிக்கையும் புலப்படும்.

அறத்தைக் காக்க கானகம் நடந்ததும் கஷ்டங்கள் பல அடைந்ததும் வைதேகியை மீட்கக்கொடிய அசுரருடன் போரிட்டதும் பெருங்காவியம் மட்டுமல்ல பேரின்பம் தரும் நயம் மட்டுமல்ல சத்தியத்தை உறுதி செய்ய உதித்த வேத மல்லவா ? அந்த வேத வடிவாகிய புண்ணியமூர்த்தியின் வித்தகத் திருப்பாதம் கல்லிலும், முள்ளிலும் நடந்த கதையே ராம காதை. அந்தக் காதையிலே ஈடுபட்ட பெரியவர்கள் பலர்.

ஆழ்வார்கள்
பக்த ராமதாஸர்
தியாகப்பிரமம்

போன்ற பல பெரியவர்கள் ராமா; ராமா என்ற திருமந்திரத்தின் மகிமையை உணர்ந்தவர்கள்.

கம்பனுக்கும் இந்த மந்திரம்தான் அடிப்படையாக இருந்தது.

ராம நாமத்தைச் சொல்ல வருகிறபொழுது 'மும்மை சால் உலகுக் கெல்லாம் மூல மந்திரம்' என்பான் கம்பன்.

அத்தகைய மந்திரத்தை ஆதாரமாகக்கொண்டு கம்பன் காவியக் கோவில் கட்டினுன். அந்த மகாகவிக்கு நம் கம்பன் அடிப்பொடி காரைக்குடியில் மணிமண்டபம் கட்டி பெருமை பெற்ருர்.

அதற்கு தமிழக மக்கள் அவருக்குச் செய்யும் நன்றிக் கடன் என்ன?

அவர் எடுத்த காரியங்களை நிறைவேற்றுவதும், அவை மிளிர ஒளிர மென்மேலும் பாடுபடுவதும்தான்.

இது ஓர் இலக்கியப் பணி!

ஏனென்ருல் அவர் இலக்கியம் வேறு தன் வாழ்வு வேறு என்று இல்லாமல் இரண்டறக் கலந்து வாழ்த்து மக்களை இலக்கியத்துறையில் ஈடுபடச் செய்த பேரறிஞர்.

இவ்வாறு இலக்கிய உலகில் இரண்டறக் கலந்தவகர்கள் பலர்,

டி. கே. சி.
பாஸ்கரத் தொண்டைமான்
பால் நாடார்
இராஜாஜி
கல்கி கிருஷ்ணமூர்த்தி

இந்த வரிசையில் நம் கணேசன் வந்து பெருமை பெற்றிருப்பது நகரத்தார் சமூகத்திற்குப் பெரும் சிறப்பைத் தந்துள்ளது.

வானத்திலே ஒளிவிடும் பல நட்சத்திரங்களில் அடையாளம் காட்ட நகரத்தார் குலத்தின் நட்சத்திரம் ஒன்றும் ஒளிவிடுகிறது என்ருல் அவர் நம் **கணேசன்**.

இந்த நட்சத்திரமான எங்கள் அண்ணன் திரு. சா. கணேசன் அவர்களைக் கவிதை உலகமும், தொண்டு உள்ளமும் என்றும் மறவாது வாழ்த்தும்.

## பிரிட்டிஷ் சாம்ராஜ்யமும் சா. கணேசனும்

1942 ஆகஸ்ட் புரட்சியில் திரு. சா. கணேசனை பிடிப்பதற்கு ஆங்கிலேயர் ஆட்சி தீவிரமுயற்சி எடுத்தது. பிடிக்க முடியவில்லை. சுட உத்தரவு பிறப்பித்தது. சுட முடியவில்லை. இறுதியில் இராஜாஜி ஆதரவில் கோர்ட்டில் ஆஜராகி அலிபுரம் சிறையில் இருந்து விடுதலையடைந்து மக்களிடம் நன்மதிப்பையும் புகழையும் பெற்றார்.

## பிள்ளையார் இயக்கம்

ஈரோட்டில் ஈ. வெ. ரா. அவர்கள் பிள்ளையார் உடைப்பு இயக்கத்தை ஆரம்பித்து பிள்ளையார்களை உடைக்க முயன்றதை நமது கணேசன் தொண்டர்களை திரட்டி ஈ வெ. ரா. நடத்திய பிள்ளையார் உடைப்பு இயக்கத்தை தவிடுபொடியாக்கி சமயத் தொண்டு புரிந்து பிள்ளையார் கோவில்களை உடைக்காமல் தெய்வப் பணியாற்றி பெருமை பெற்றார்.

## பிள்ளையார்பட்டியில் சா. கணேசன்

பிள்ளையார்பட்டியில் சா. கணேசன் குடும்பத்தினர்களுக்கு பாரம்பரியமாகத் தனிப்பற்றுண்டு. பிள்ளையார்பட்டி அருள்மிகு கற்பக விநாயகர் கோவில் பல்லவர் காலத்தில் தோன்றிற்று என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட கல்வெட்டுக்களை அரசாங்கத் திற்கு அறிவித்து ஆராய்ச்சித்துறைக்கு படம் பிடித்து அனுப்பி அகில இந்தியாவிற்கும் இக்கோவிலின் பெருமையை வெளிப் படுத்தி சிறப்பித்தவர் நமது திரு சா. கணேசன். திரு. சா. கணேசன் பிள்ளையார்பட்டி வந்தாலே தனிச்சிறப்பாக இருக்கும் சமூகத்தின் பண்டைய கொள்கை, கட்டுப்பாடு, கண்ணியங்களை பெருமையொடு எடுத்து உரைப்பார். இவர் சொல்லுக்கும், பேச்சிற்கும் தனி மதிப்பு உண்டு. இவர் பிள்ளையார்பட்டி கோவில் அறங்காவலர்களில் ஒருவர்.



வாழ்க! வளர்க! கணேசன் புகழ்!
அவரது ஆத்மா சாந்தி பெறுக!





# 1947-ல் விவசாயப் போராட்டத்தில் எழுதிய கடிதம்

அன்புமிக்க தம்பி அருணாசலனுக்கு,

தான் பூங்குன்ற நாட்டின் விவசாயக் காங்கிரஸ் தலைவனாகப்பதவி ஏற்று பணியாற்றுவதைப் பாராட்டுகிறேன். அஞ்சாது நின்று பணியாற்றுங்கள். பலனளிக்கும்.

பூமி பகவானுக்கு பாத்தியமானது. நிலம் உழுபவனுக்கே சொந்தம் என்பது காந்தியடிகள் கூறியவாக்கு. இதன் அடிப்படையில் நீங்கள் ஆற்றுகிற தொண்டில் உங்கள் மீது பல இன்னல்களும், கோர்ட் வழக்குகளும், அடக்குமுறைகளும் சூழ்ந்திருப்பதாக அறிகிறேன்.

இந்த அடக்குமுறைகளைக்கண்டு அஞ்சாதீர்கள். அஞ்சாது இறுதிவரை தொடர்ந்து உங்கள் பணியைச் செய்யுங்கள். இறுதியில் நீங்கள் சட்டபூர்வமான வெற்றியும் பெறுவீர்கள். உங்கள் லட்சியம் நிறைவேறி விவசாய மக்கள் நலம்பெறுவர் நாடுசெழிக்கும். துன்பத்திற்குபின் இன்பம்.

அன்புள்ள,

(சா. கணேசன்)

நா. அருணாசலன்

கண்டவராயன்பட்டி.

# சா. கணேசன்

மதுவிலக்கு சம்பந்தமாய்

<u>கூறிவந்த பொன்மொழிகள்</u>

1) கள்ளை ஒழிப்பதும், கதர் அணிவதும் நாட்டின் நலனைக் காக்கும் புண்ணிய மாகும்.

2) கள்ளு, சாராயக் கடைகளை ஒழிக்க சேவை செய்யுங்கள்.

3) கள் விற்பது பாவம் கள், சாராயக் கடைகளை வைத்து வருமானம் தேடுவது நாட்டுக்குச் செய்யும் துரோகம்.

4) மதுக்கடைகளை ஒழிக்க மக்கள் போராட வேண்டும்.

வள்ளுவர் அச்சகம், காரைக்குடி - போன்: 506